# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

## Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்


சமர்ப்பணம் . . . 9
1. தூக்கம் . . . 10
2. கவிதை . . . 11
3. கவிகள் பிறப்பது . . . 12
4. காதல் . . . 13
5. ஆண் பெண் . . . 14
6. நம் காதல் கண்டு . . . 15
7. துடிப்பு . . . 16
8. காதலின் மகிமை . . . 17
9. இதயச்சிறை . . . 18
10. வெற்றி எனதே . . . 19
11. உன் அன்பு . . . 20
12. அனாதை . . . 21
13. முதல் சந்திப்பு . . . 22
14. பிரிவு . . . 23
15. இரவல் . . . 24
16. என் காதல் . . . 25
17. இயற்கை . . . 26
18. சிதைவுகள் . . . 28
19. நிழல்கள் பின்தொடரும் . . . 29
20. கவலை . . . 30
21. உடன்பிறப்பு . . . 31
22. கண்ணன் . . . 32
23. தாயுமானவள் . . . 33
24. தாய்மை . . . 34
25. தினம் ஒரு கனா . . . 36
26. அவள் துறவி . . . 37
27. இதயச்சுமை . . . 38
28. நிஜம் தேடாதே . . . 39
29. தீராததால் . . . 40
30. கேள்வி . . . 41
31. அம்மா . . . 42
32. அப்பா . . . 43
33. நீயில்லாததால் . . . 44

வணக்கம் நான் ஹேமா தனசேகர்
கவி உலகின் புதுமுகம்.
என்னுள் அமிழ்ந்து
கிடந்த தமிழினை
உங்கள் முன் ஒப்படைவு
செய்கிறேன் கவிகளாய்.
இந்த புதுமுக பதுமைக்கு
உங்கள் உளிகளைத் தாருங்கள்
ஆதரவுகளாகவும்
விமர்சனங்களாகவும், நன்றி.

# சமர்ப்பணம்

அன்னைத் தமிழுக்கும்
ஆன்றோர் சான்றோருக்கும்
எல்லாம் வல்ல இறைவனுக்கும்
உறவுகளுக்கும்
ஊக்கம்
தந்தவர்களுக்கும்
எண்ணற்ற நட்புகளுக்கும்
ஏடு தந்து தூண்டிய
என் மூத்த கவிகளுக்கும்
கவிகள் சமர்ப்பணம்.

# 1. தூக்கம்

இன்னொரு
ஜென்மம்
போல்
இன்னொரு
விடியல்
காண
இமை மூடி விழி
ஏற்கும் தவம்.

# 2. கவிதை

உள்ளத்து உணர்வுகளை
உரைக்க உதடுகளுக்கு
வீரியம் குறைவு
என்பதாலோ என்னவோ
வார்த்தைகள் கூடி
கைக்கோர்த்து
வந்து நின்றன
கவிதைகளாய்...

# 3. கவிகள் பிறப்பது

ஆணும் பெண்ணும்
புணர்வதன் பெயரால்
பிள்ளைப் பேறு
பெறுவது போல்
பேனா முனையோடு
எழுத்துக்கள்
புணர்வதல்லவோ
கவிகள் பிறப்பெடுப்பது...

# 4. காதல்

என் இதயம்
உனக்காய்
உருவானதென்று
உணர்ந்தேன்
நான்
உன்னில்
உறைந்த
தருணத்தில்..

# 5. ஆண் பெண்

காரணமில்லா
காதலை
ஆணிடம்
அனுதினமும்
தேடுபவள்
பெண்
ஒவ்வொரு தேடல்
முடிவிலும்
அவள் அடைய
எண்ணுவதெல்லாம்
தன்னவனின் ஒற்றை
முத்தத்தையே...

# 6. நம் காதல் கண்டு

கலைகள்
அனைத்தும்
களைப்படைந்தன
நம் காதல்
களம் கண்டு
மலர்களும் கூட
மலைத்து போய்
நின்றன
நம் காதல்
மொழி கண்டு
புற்களும் கூட
பொறாமை கொண்டன
நம் இருவரின்
புரிதல் கண்டு...

# 7. துடிப்பு

இதயத்துடிப்பு
நின்றால் என்ன
இது உன்
நினைவுத் துடிப்பு
என் மரணத்திற்கு
முன்னால் வரை
உன் பின்னால்
வரும்...

# 8. காதலின் மகிமை

தன்னவளின்
காதலை
உணர்ந்து பொக்கிஷமாக
தன்னுள் சுமந்து
செல்வது ஆண்மை
உணர்ந்த காதலில்
உருகி கரைந்து
உறைவது பெண்மை..

# 9. இதயச்சிறை

ஆண்டுகள்
ஆயிரம்
உன் அரவணைப்பில்
அழகிய
உன் இதயச்சிறையில்
ஆயுள் கைதியாய்
வாழும் வரமொன்றை
வேண்டுகிறேன்
இப்படிக்கு
உன்னவள்...

# 10. வெற்றி எனதே

துரோகம்,
இழப்பு
அவமானம்,
ஏமாற்றம் என
அனைத்தையும்
வென்று
தூய உன்
அன்பிடம் தோற்றேன்
இருப்பினும்
வெற்றி எனதே
உன்னை அன்பை
என் வசமாக்கியதால்...

# 11. உன் அன்பு

நித்தம் நீ தந்த
நேசத்தால்
நித்திரை தொலைத்தேனடா
முழு நிலவென நீ
தந்த காதலால்
பிறை போல் தேய்ந்தேனடா
என் உயிருக்கு உரமூட்ட
உன் சுவாசம் ஒன்று போதும்
ஓய்வற்ற உறுதுணையாய்
உன் அன்பு ஒன்று போதும்.

# 12. அனாதை

விடுதிகளில் வாழும்
அனாதைகளை விட
வீடுகளில் வாழும்
அனாதைகளே அதிகம்
தாய் தந்தை
இல்லாமல் இருப்பவர்கள்
மட்டும் அனாதை அல்ல
தாய் தந்தையால்
தவிக்கவிடப்பட்டவர்களும்
அனாதை தான்… .

# 13. முதல் சந்திப்பு

கன்னி அவளின்
கைக்கோர்த்து
காதல் தவம் செய்து
காலம் வென்று வாழ
கண்களால்
கையொப்பமிட்டாய்
இந்நாளான பொன்னாளில்...

# 14. பிரிவு

உள்ளத்தால் மட்டும்
உணர முடிந்த
உணர்வுகளை
வெளிக்கொணர
உதடுகளுக்கு சேதி அனுப்பினேன்
உதடுகள் செயலிழந்த
நிலையில்
கண்களுக்கு கோரிக்கை
விடுத்தேன்
கண்ணீர்த் துளிகளும்
காணாமல் போன நிலையில்
கலைகளின் அங்கமான
கவிகளால் ஒப்புவிக்கிறேன்
நம் பிரிவின் வலியை...

# 15. இரவல்

உன்னை நேசித்து
உன் மூச்சை சுவாசித்த
தருணங்கள் கடந்து
உன்னை யாசிக்கும்
தருணத்தை இரவல்
கேட்கிறேன்
உன் நினைவுகள்
கூரிய வாள்
போல் வந்து
கொலை செய்து
போகிறது
உன்னை முதல் முறை
பார்த்த என்
கண்களை அல்ல
உன்னை முழுதும்
நேசித்த
என் இதயத்தை...

# 16. என் காதல்

அன்பெனும் வாசத்தில்
தோன்றிய சுவாசம் நீ
ஆயிரம் ஆயிரம்
இரவுகள்
தந்த பல நூறு
வண்ணக்
கற்பனைகள் நீ
இருளில் பூத்த
விண்மீன் போல்
இதயத்தில் பூத்த
இன்னொரு
இதயம் நீ
ஈரமணலில் உண்டான
ஏகாந்தம் நீ
உறக்கம் தந்து
மகிழ வைக்கும்
இன்னொரு
தாய்மடியும் நீ
ஊஞ்சல் தனில்
ஆடுகின்ற பூபாளம் நீ
எல்லையில்லா இன்பம்
ஈட்டிய கவிதை நீ
ஏட்டில் எழுதப்படாத
காவியம் நீ
ஐயாயிரம் கற்பனைகள்
கோர்த்து
வந்த கனவு நீ
ஒன்பது கிரகங்களின்
சங்கமம் நீ
ஓயாத ஒரு
நினைவும் நீ
ஔசதமும் நீ...

# 17. இயற்கை

சிணுங்கும் சித்திரச்
செவ்வானம்
கண்ணுக்கெட்டும்
தூரம் வரை
தோன்றி நிற்கும்
கருமேகக் கூட்டம்
வளர்ந்து வளர்ந்து
தேய்ந்து கொண்டிருக்கும்
வான் நிலவு
கட்டிக் குறும்பாய்
கண்சிமிட்டிக் கொண்டு
விருட்சமாய் வந்து
நிற்கும் விண்மீன் கூட்டம்
மழலையென துள்ளும் மரங்கள்
மங்கையர் சுடுவதற்கென்றே
மணம் கமழ்ந்து
காத்திருக்கும் மலர்கள்
ஒருமுறை சுவாசித்த பின்னும்
மறுமுறை சுவாசம்
தரக் காத்திருக்கும் காற்று
தூரத்துச் சொந்தம்
போல்
எட்டி நின்று
எப்போதாவது பார்த்து
விட்டு செல்லும் வானவில்
எப்பொழுதும் நமக்குத்
தேவையான
நன்னீரைத் தன் கண்ணீரால்
தந்து கொண்டிருக்கும் மழை
நம் மீது காதல் கொண்டு
சுற்றிலும் நம்மை காண
காத்திருக்கும் மலைகள்
விழித்தெழு எனக்
கூறும் பகல்

விழி மூடு எனக்
கூறும் இரவு
இவைதான்
இயற்கையின் குணம்
இவற்றை வதம்
செய்து
வாழும் மானுடத்தின்
மனம் மட்டுமல்ல
குணமும் எங்கே
சிதைந்து போனது?

# 18. சிதைவுகள்

உடல் மரணத்திற்கு பின்
சிதைவுகளுக்கு ஆட்படும்
மனமோ மரணத்திற்கு
முன்னமே
சிதைவுகளுக்கு
ஆட்படும்
ஆறாத
காயங்களினாலும்
தேறாத வலிகளாலும்...

# 19. நிழல்கள் பின்தொடரும்

உன்னோடு பழகிய
நாட்களின்
நிஜங்களை
தொலைத்து விட்டு
நினைவுகளை மட்டும்
சேமிக்கின்றேன்
நீ என்னை
பிரிந்தாலும்
என் நினைவுகள்
உன்னை
பின்தொடரும்
நிழல்களாய்...

# 20. கவலை

கண்களில் தவழும்
ஒரு துளி கண்ணீர்
விழுந்தாலும்
மறுதுளி கண்ணீர்
பிறப்பது போல்
கவலைகளும் பிறந்து
விடுகின்றன...

# 21. உடன்பிறப்பு

ஒரு கூட்டில் பிறந்தோம்
ஒன்றாய் வளர்ந்தோம்
உணவுகள் மட்டுமல்ல
உணர்வுகளும் பகிர்ந்தோம்
சந்தோஷச் சாரலில் மட்டுமல்ல
கண்ணீர் மழையிலும்
ஒன்றாய் நனைந்தோம்
ஒருவரை ஒருவர்
நேசிக்க மட்டுமல்ல
சுவாசிக்கவும் கற்றோம்
ஒருவரை ஒருவர்
புரியும் முன் பிரிந்தோம்
பிரிவுக்குப் பின்
சந்திக்கவில்லை
தனித்திருந்தாலும் நினைவுகள்
சேர்ப்போமென...

# 22. கண்ணன்

கவலையை
ஏந்திய
கன்னியின்
கண்களில்
காதலை ஏந்தச்
செய்த
கனவுக் காதலன்
கண்ணன்...

# 23. தாயுமானவள்

தாய்மடியே காணாது
பேதை தாயுமாகினாள்
மேதை உனக்காய்
உன்னை தன்
விந்தையென
தன்னுள் சுமப்பாள்
தான் மண்ணுள்
சென்றாலும்...

# 24. தாய்மை

கருவில் என்னை
சுமந்தாய்
என் மீதான
காதலை வளர்த்தாய்
என்னால் கண்ணீர்
சிந்தினாய் இருந்தும்
என்னை நேசித்தாய்
உன் இரத்தம் உருக்கி
என் வயிற்றுக்கு
உணவு கொடுத்தாய்
உண்மையான அன்பினை
உணர்வினுள்
உணரச் செய்தாய்
நான் நடக்கையில்
நீ பின்தொடர்ந்தாய்
என் நிழல் கூட
தரையில் விழுந்து
விடக் கூடாது என்று
என் சிரிப்பை
ஓர் சித்திரம் போல்
உன் நினைவுகளில் பதித்தாய்
நான் உருவான
நாள் முதல் நீ
உன் இன்பத்தை
இழந்தாய்
நேற்று இன்று
நாளை என
முக்காலங்களிலும்
என் நினைவுகளை
ஓட்டிப் பார்த்த
ஒளித்திரை நீ மட்டுமே
என் மீதான
உன் அன்பை வெளிப்படுத்தும்
வார்த்தைகள் உலகின்
எம்மொழியிலும் இல்லை

நித்தம் நீ
தொலைத்த
நித்திரைகளும் ஓதும்
உன் நினைவுகளை…

## 25. தினம் ஒரு கனா

அனுதினம் ஆயிரம்
ஆசைகள்
ஆசையில் தோன்றிய
கனவுகள்
கனவுகள் கருவறுக்கப்பட்ட
கவலைகள்
கவலைகள் தந்த
காயங்கள்
காயங்கள் தந்த
அனுபவங்கள்
அனுபவங்களாய்
ஒலித்த அசரீரிகள்
அதனை அடுக்கடுக்காய்
சுமந்து கொண்டு ஆழ்மனம்
திக்கு தெரியா
திட்டங்களோடு
கட்டுப்பாடற்ற
கட்டுமரமாய்
தனித் தீவில்
மாட்டிக் கொண்டு
சிறு மனித வாழ்க்கை
அலை மோதுகிறது...

# 26. அவள் துறவி

அன்னை தந்தை துறந்து
உற்றார் உறவினர் துறந்து
சுற்றமும் நட்பும் துறந்து
உன்னை அடைகிறாள்
அடைந்ததன் பலனாய்
ஆடை துறந்து
அழகு துறந்து
உருவம் துறந்து
உயிரை சுமந்து
உருவாக்கித் தருகிறாள்
தந்ததன் பலனாய்
உறக்கம் துறந்து
உணவு துறந்து
தன்னையே துறந்து
அன்னை எனும்
வடிவெடுக்கிறாள்
இவை அனைத்தும் துறந்து
அடைய எண்ணுவதெல்லாம்
தன்னவனின் அன்பு ஒன்றே
அது சாத்தியமற்றது என
உணரும் தருணம்
அவள் மனதில் எழும்
மௌன போராட்டம்
ஆயிரம்
மகாபாரதத்திற்கு
சமம்...

# 27. இதயச்சுமை

இதயச்சிறையில்
சிக்கிய சொல்லாத
சுமைகளை
சொந்தமாக கொண்டு
சுடர் விட்டு எறியும்
வலிதனில் உருகிக் கொண்டு
செல்லும் ஆழ்மனதின் வலிகளை
உலகமே உணராமல் போனாலும்
உற்ற நண்பன்
உணர்வான்
இதயச் சுமைகளை
இதமான சுகமாய்
உணர வைப்பான்
நல்ல தோழமை
துடுப்பைப் போன்றவன்
திசையறியா தருணங்களில்
ஆழியின் ஆழம் அறிந்து
அழகாய் கரை சேர்ப்பவன்...

# 28. நிஜம் தேடாதே

நினைவுகள் என்றும்
பூச்சிக்கொல்லி
நிஜத்தை சாகடித்து
நிழல்களை
மட்டும் விட்டுச்
செல்லும்
நிஜத்தை தேடி
நிம்மதி
தொலையாமல்
நினைவுகள் தரும்
சுகம்தனில்
வாழ்வோம்
நிலைகுலையாமல்...

# 29. தீராததால்

அன்பே உன் மனதில்
கணத்தை தரக்கூடாதென
வலிகளை என்னுள்
பூட்டி வைத்தே
மனம் முழுவதும்
ரணமாகின
தீயில் எரிந்த
உன் வார்த்தைகள்
இன்னும் தீராததால்...

# 30. கேள்வி

கால இயந்திரம் கொண்டு
நினைவுகளில் நிற்கும்
ஆறாக் காயங்களை
ஆற்றித் தேற்றிக் கொண்டு
மீண்டு வரவே துடிக்கிறேன்
இருந்தும் ஏனோ
தூண்டிலில் சிக்கிய
மீனாய் தவிக்கிறேன்
காயம் கண்டவர் பிழையா?
காயம் தந்தவர் பிழையா?

# 31. அம்மா

அள்ளி அணைத்துக் கொண்டு
அத்துணை துன்பத்தையும்
தாங்கினாய்
நித்திரையும் காட்டாத
சொர்க்கத்தை
நிஜத்தில் காட்டினாய்
நிலவு காட்டி சோறூட்டினாய்
நினைவு தெரியும் முன்
விட்டுச் சென்றாய்
என் உடலின் ஒவ்வொரு
அணுவிற்கும்
உணர வைத்து விட்டாய்
உன் பிரிவின் வலியை...

# 32. அப்பா

விவரம் அறியாத
வயதில்
நீ தந்த பாசத்தை விட
நீ விட்டுச் சென்ற பின்
வந்த வலிகள் தான்
உன்னை அதிகம்
நினைவுபடுத்துகின்றன...

# 33. நீயில்லாததால்

நீங்காத
நினைவுகளுடன்
நிழல்களின்
துணையுடன்
நிலையில்லா உலகில்
நீ தந்த
சுவாசத்தோடும்
நிகரில்லா
வலிகளோடும்
நிர்க்கதியாய் நான்...

# 34. மகளின் கடிதம்

உன் நினைவெனும்
நதியில் சுவாசம்
தொலைத்து துடிக்கும்
சிறு மீனாய் மனம்
உண்மையில் அம்மா
நீ தொலைந்த நாள் முதல்
உலக உறவுகளும்
தொலைந்து ஒட்டுமொத்த
உணர்வுகளும் துறந்து
அகதியாய் போன அடி மனதை
ஆற்றிடவோ தேற்றிடவோ
ஒரு கனமேனும்
கனவொன்றிலேனும்
கண் திறப்பாயா?
இப்படிக்கு
-அன்பு மகள்

# கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

- **கணியம் மின்னிதழ்** kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- **கட்டற்ற தமிழ் நூல்கள்** FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.
- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

**நன்கொடை**

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

**Account Type : Current Account**